29th March 1961]

SRI A. VEDARATHNAM : விவசாயக் கல்லூரி ஏற்படுத்துவதைக் காட்டிலும் அதிக பயன் உள்ள விவசாயப் பண்ணைகளை ஏற்படுத்தி அதிக மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்கலாம். இந்த அக்ரிகல்ச்சரல் ஸ்கூலை ஏற்படுத்தி சரிவர பரீட்சைகள் நடத்துவதற்குத் தகுந்த நிபுணர்களை எடுக்கலாம். இந்தத் துறையிலே அரசாங்கம் கவனம் செலுத்தி விவசாயப் பள்ளிகளை ஆரம்பிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த யோசனை பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. உடனடியாக அடுத்த ஆண்டிலேயே 6 பள்ளிகளை, எங்கெங்கே ஆராய்ச்சி பண்ணைகள் இருக்கின்றனவோ, மற்ற நிலங்கள் இருக்கின்றனவோ அங்கெல்லாம் அமைக்க இருக்கிறார்கள். இதில் பயிற்சி பெறுகிறவர்கள் உத்தியோகத்திற்குப் போவதற்காக அல்ல. இதில் சேரவேண்டியவர்கள் விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவும் விவசாயத்தில் அக்கறை காட்டக்கூடியவர்களாகவும் இருப்பவர்களுக்கு பயிற்சி அளிக்கப்பட்டு பயிற்சி முடிந்த பிறகு அவரவர்கள் கிராமத்திற்குப் போய் அங்கு பயிர்களைக் கவனிப்பதற்காக என்ற நோக்கத்தோடு தான் செய்யப்படுகிறது.

DEPUTY SPEAKER : There are two more questions to be answered. We shall dispose them off in a few minutes. 9-30 a.m.

*Housing Ministers' Conference, Hyderabad (recommendations)*

*1179 Q.—SRI P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா

1960 செப்டெம்பர் மாதம் 8-ம் தேதியில் 548 எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி அதில் தெரிவிக்கப்பட்டிருக்கும் தீர்மானங்களிலே எந்தெந்த தீர்மானங்கள் அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI V. RAMAIAH : A copy[a] of the decisions of the Government of India on the recommendations of the Fourth Housing Ministers' Conference held at Hyderabad in November 1959, is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : மேஜையின் மேல் வைக்கப்பட்டிருக்கிற குறிப்பிலே விவசாயிகளுக்கு வீடு கட்டுவதற்கு வீட்டு மனைகள் உதவி செய்வதற்கு தெரிவிக்கப்பட்டிருப்பதிலே "The State Government should, however, endeavour to do so wherever possible." குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகையால் ராஜ்ய சர்க்கார் வீட்டுமனைகளாவது வாங்கிக்கொடுப்பதற்கு ஏதாவது நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவர்கள் செய்த ஒவ்வொரு ரெக்கமெண்டேஷனும் பைலில் இருக்கிறது. மனைக்கட்டு சம்பந்தப்பட்ட மட்டில் ஒரு தனிக்கேள்வி போட்டால் புள்ளிவிவரம் தயார் செய்து கொடுக்கப்படும்.

*Backward community students (scholarships)*

* 1180 Q.—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the number of fresh applications received from Backward and Most Backward Community students for residential and non-residential scholarships for both High School and College courses and Technical courses like Medicine, Engineering, Law, etc., for the year 1960–61;

(*b*) what are the figures for different communities district-war;

---

[a] Printed as Appendix VI on pages 416–419 infra.